சன்மார்க்க போதினி வர்க்கம்

# பாரதச் சுருக்கம்

ஆரம்ப பாடசாலை மாணுக்கர்களுக்காகவே எழுதப்பட்டது

---

இது

கோயில்பட்டி ரேஞ்சு ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டர்

எஸ். பஞ்சாபகேச சர்மா அவர்கள் பி. ஏ., எல். டி.,

எழுதியது.



---

துரைத்தனத்தார் அங்கீகரித்தது








மதுரை

வி. சு. சுவாமிநாதன்,

வெளியிட்டது.

 [விலை 0-3-0

# முன்னுரை

நமது முன்னோர்களின் பெருமையையும், தர்மவழி களையும் எடுத்துரைக்கும் பூர்வகதையான மஹாபாரதக் கதையைக் குழந்தைகளுக்குத் தக்கபடி கற்பிக்க வேண்டியது அவசியம். எலிமெண்டரி பாடசாலையில் ஐந்து வருஷம் படித்தபிறகும் நமது குழந்தைகளுக்குப் பஞ்சபாண்டவர் யார், என்று கூடத் தெரியாமல் இருப்பது மிக்க வியஸனிக்கத் தக்கது. இதுபற்றியே நமது நாட்டுத் தற்காலக் கல்வியை சிலர் குறை கூறுகின்றனர். நமது முன்னோரின் பெருமையைக் குழந்தைகளுக்கு அடிக்கடி ஞாபகப்படுத்துவதும் அவர்களுடைய மேன்மைக் குணங்களை எடுத்துக் கூறி மனதிற் பதியச் செய்வதும் நமது சிறுவர்களை சன்மார்க்க வழியில் நடத்தத் தூண்டுகோலாகும்.

எலிமெண்டரி பாடசாலைப் பிள்ளைகள் படித்துத் தெரிந்து கொள்ளும்படி மஹாபாரதக் கதையை எடுத்துச் சொல்லும் சிறு புஸ்தகம் எளிய நடையில் இல்லாததே மேற்சொன்ன குறைவுக்கு முக்கிய காரணம். அதை நீக்கும் பொருட்டு இச் சிறு புஸ்தகத்தைச் சுருக்கமாகவும், குழந்தைகளின் மனப்பான்மைக் கேற்றவாறும் எழுதவேண்டிய அவசியத்தால் முக்ய கதையை மாத்திரம் எழுதியிருக்கிறேன். இது சம்பந்தமாகச் செய்யவேண்டிய சீர்திருத்தம் ஏதேனுமிருப்பின் அதை நன்றியுடன் ஏற்றுக்கொள்வதுடன் சிறுவர்களுக்கென்று எழுதிய இப்புஸ்தகத்தை ஆதரிக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

எஸ். பஞ்சாபகேச சர்மா.

# பாரதச் சருக்கம்

## காங்கேயன் சபதம்

அநேக ஆயிரம் வருஷங்களுக்கு முன்னமே வட இந்தியாவில் அஸ்தினபுரம் என்ற சிறப்பு வாய்ந்த பட்டணம் இருந்தது. அதில் சந்திர குலத்து அரசர்கள் வெகுபெருமையுடன் அரசாண்டு வந்தார்கள். அவர்களில் சந்தனு என்பவன் மிக வும் கீர்த்தி வாய்ந்தவன். சந்தனு மஹாராஜனுக்கு மூத்தமனைவி கங்கை என்பவள். அவளிடம் சந்தனு வுக்குப் பிறந்த எட்டுக் குழந்தைகளில் எட்டாவது குழந்தையாகிய காங்கேயன் ஒருவனே உயிருடன் இருந்தான். இவனைப்பெற்றதும் இவன் தாயாகிய கங்கை அரசனிடமிருந்து பிரிந்து சென்றாள். அரசனும் காங்கேயனை மிகவும் செல்வமாக வளர்த்து வந்தான். காங்கேயன் நாளடைவில் புத்தியிலும் தேகபலத்திலும் வல்லவனாக விளங்கி, நல்ல கல்வி யையும் வேத சாஸ்திரங்களையும் கற்று, வெகு புத்தி சாலியும் பராக்ரமசாலியுமானான்.

இது இவ்வாறிருக்க, சந்தனு மஹாராஜன் தனக்கு இரண்டாவது மனைவியாக ஸத்தியவதி என்ற ஒரு செம்படவன் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பினுன். ஆனல் ஸத்திய வதியின் தகப்பன், அரசனுக்கு முன்னமேயே பட்டத்துக்குரிய பிள்ளை இருப்பதால், தன் மகள் வயிற்றில் பிறக்கும் குழந்தைக்குப் பட்டம் கிடைக்காதே என்று எண்ணி, பெண்ணைச் சந்தனு மஹாராஜனுக்குக் கொடுக்கச் சம்மதிக்கவில்லை. இந்த சமாசாரத்தைத் தெரிந்துகொண்ட காங்கேயன், எவ்விதத்திலும் தகப்பனுரைச் சந்தோஷப் படுத்துவதே மகனின் கடமை என்று தீர்மானித்துக்கொண்டு, ஸத்தியவதியின் தகப்பனைக் கண்டு, அவன் முன்னிலையில் 'தனக்குப்பட்டம் வேண்டியதில்லை' என்று சபதம் செய்துகொடுத்து, ஸத்யவதியைத் தன் தகப்பனுருக்கு கலியாணம் செய்துகொடுக்கவேண்டினுன். செம்படவன் அப்பொழுதும் சம்மதிக்காமல் காங்கேயனைப்பார்த்து "உனக்குப் பட்டம் வேண்டாமென்ருலும் நாளை உனக்கு ஒரு குழந்தை பிறந்தால் அவனல்லவோ பட்டத்துக் குரியவனுவான். என் மகள் வயிற்றுக் குழந்தைக்கு எவ்விதம் பட்டம் கிடைக்கும்?" என்ருன். உடனே காங்கேயன், தான் இனி கலியாணமே செய்துகொள்வதில்லையென்றும், பிரம்மசாரியாகவேஇருப்பதாகவும் கடுமையான சபதத்தைஅவன் முன்னிலையில்செய்துவிட்டு,

"இனியாவது ஸத்யவதியை என் தகப்பனுருக்குத் தயவு செய்து விவாஹம் செய்து கொடும்" என்று வேண்டினன். அவ்விதமே செம்படவனும் சம்மதிக்கத் தன் தகப்பனுரை சந்தோஷப்படுத்தினன். இவ்விதக் கடுமையான சபதத்தைச் செய்துகொண்டதால் இவனுக்கு பீஷ்மன் என்று பெயர்.

---

## திருதராஷ்டிரனும், பாண்டுவும்

சந்தனு மஹாராஜனுக்கு ஸத்யவதியினிடம் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவன் சிறு பிராயத்திலிருந்தான். இளையவனுன விசித்திரவீரியனுக்கு அம்பிகை, அம்பாலிகை என்று இரண்டு மனைவிகள் உண்டு. இவர்களிடம் திருதராஷ்டிரன், பாண்டு என்ற இரண்டு குமாரர்கள் வியாஸ பகவானது அநுக்ரஹத்தால் பிறந்தார்கள். மூத்தவனுகிய திருதராஷ்டிரன் பிறவிக் குருடனுக இருந்தான். ஆகையால் இளையவனுன பாண்டுவே தமயனுக்குப் பதிலாக இராஜ்ய காரியத்தைத் தன் பெரிய தகப்பனுரான பீஷ்மரை முதல் மந்திரியாக வைத்துக்கொண்டு அரசாட்சி செய்துவந்தார். இவருக்கு விதுரர் என்று ஒரு தம்பி உண்டு. அவர் மஹா ஸாது, புத்திமான்; வில்வித்தையில் தேர்ந்தவர். பீஷ்மரது புத்திமதிப்படி இவர்கள் ராஜ்யத்தை நீதிவழுவாது ஆண்டு வந்தார்கள்.

---



கர்ணன் கவசகுண்டலத்தோடு நதியில் அகப்படல்

## குந்தியின் வரலாறு

குந்திபோஜ தேசத்து அரசனுக்குக் குந்தி என்ற ஒரு பெண் உண்டு. அவள் சிறு குழந்தையாக இருக்கும்பொழுது துர்வாஸ மஹரிஷிக்கு அன்புடன் பணிவிடைசெய்து அவரை மகிழ்வித்தாள். அதனல்அந்த ரிஷி மிகவும் சந்தோஷம்அடைந்து அவளுக்கு ஐந்து மந்திரங்களை உபதேசம் செய்தார். அவ்வைந்து மந்திரங்களில் ஒன்று சூரியனைக் குறித்தது. அதை அவள் உடனே சூரியனைக் குறித்துத் தியானம் செய்தாள்.

---

## கர்ணன் பிறப்பு

அதனல் உடனே அவளுக்கு சூரியனுடைய அநுக்ரஹத்தால் **கர்ணன்** என்ற ஒரு பிள்ளை பிறந்தான். கலியாணம் ஆவதற்கு முன்னமேயே குழந்தை பிறந்ததால், அவனை அவள் தன் மகன் என்று சொல்லிக்கொள்ள வெட்கங்கொண்டு, ஒரு பெட்டியில் வைத்து ஆற்று வெள்ளத்தில் விட்டுவிட்டாள். அந்தப் பெட்டியை **சூதன்** என்பவன் எடுத்து அதனுள்ளே இருந்த பிள்ளையை வெகு அன்பாகத் தன் மகன்போல் வளர்த்து வந்தான்.

அக்கர்ணன் பிறக்கும் பொழுதே காதில் குண்டல மும் உடம்பில் கவசமும் அணிந்துகொண்டிருந் தான். அவனுக்குத் தன் தாய் தகப்பன் இன்னர் என்பது தெரியாது.

---

## பாண்டவர் ஜனனம்

பிறகு குந்தி பாண்டு மஹாராஜனைக் கலியா ணஞ் செய்துகொண்டாள். வெகு நாள்வரை குழந் தைகள் இல்லாததால் துர்வாஸரிஷி உபதேசித்த மற்ற மந்திரங்களை ஜெபம் செய்தாள். எமனுடைய அநுக்ரஹத்தால் தர்மபுத்திரர் பிறந்தார். வாயுவி னல் பீமனும், இந்திரனல அர்ஜுனனும் பிறந் தார்கள். மற்ற மந்திரங்களைப் பாண்டுவின் இளைய மனைவியான மாத்திரைக்கு உபதேசித்துக்கொடுக்க அதனல் அவள் நகுலன் ஸஹாதேவன் என்ற இரண்டு பிள்ளைகளை, அக்நி, வருணன் முதலியோ ரது அநுக்ரஹத்தால் பெற்ருள். இவ்வைந்து பிள்ளைகளும் பாண்டுவின் புத்திரர்கள். இவர்களுக் குப் பஞ்சபாண்டவர் என்று பெயர்.

---

## கௌரவர் ஜனனம்

திருதராஷ்டிரன் மனைவி பெயர் காந்தாரி. இவள் காந்தார தேசத்து அரசன் மகள். இவள்

மஹா கொடியவள். ஆனாலும் புருஷனிடத்தில் பக்தியும் அன்பும் கொண்டவள். இவளுக்கு துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களுக்கு கௌரவர் என்று பெயர். பாண்டவர்கள் தேவர்களின் கடாக்ஷத்தால் பிறந்தவர்களாதலால் கௌரவரைப்பார்க்கிலும், குணத்திலும், புத்தியிலும், தேக பலத்திலும் மேன்மையாக விளங்கினார்கள். கௌரவரிடம் நல்ல குணம் விசேஷமாக இல்லை; துஷ்டர்கள்; ஆனாலும் மிகவும் பலசாலிகளாக இருந்தார்கள்.

---

## பாண்டவ கௌரவரின் இளமைப் பருவம்

இக்குழந்தைகள் 105-பேருக்கும், பாட்டனை பீஷ்மர் தக்க குருவைத்தேடி கல்வி கற்பித்துவைத்தார். பிறகு வில்வித்தையில் தேர்ந்த துரோணாசாரியார் என்ற பிராமண ஆசிரியரைக்கொண்டு, இராஜகுமாரர்களுக்கு வில்வித்தை கற்றுக்கொடுத்தார். பாண்டவர்கள் வெகு திறமையாக வில்வித்தை கற்றுக் கொண்டார்கள். அதிலும் அர்ஜுனன் பெரிய வில்லாளி ஆனான். அவனுடைய வில்லிற்கு காண்டீபம் என்று பெயர். பாண்டவர்கள் படிக்கும் காலத்திலேயே இவர்களை எல்லோரும் நல்லவர்கள் என்றும், கெட்டிக்காரர்கள் என்றும் கொண்டாடினார்கள்.

அதனால் துரியோதனன் முதலியோர் இவர்களிடம் பொறாமை கொண்டார்கள். துரியோதனனோடு கர்ணனும் படித்து வந்தான். கர்ணன் துரியோதனனுக்கு முக்கிய நண்பனானான்.

---

## ஐவரின் குணாதிசயம்

பாண்டவர்களுள் தர்மபுத்திரர் மிகவும் நல்லவர். பொறுமை குணமுடையவர். சாஸ்திரங்களில் நன்றாகத் தேர்ந்தவர். பீமன் மஹா பலசாலி. ஞானமும் தெய்வபக்தியும் நிறைந்தவன். இவனுக்கு ஆயிரம் யானை பலமுண்டு. இவனைக்கண்டால் துரியோதனனும் பயப்படுவான். அர்ஜுனன் வில் வித்தையில் தேர்ந்தவன். மஹா தைரியசாலி. நகுலன் குதிரை சாஸ்திரம் கற்றவன். நல்ல ஜாதிக் குதிரைகளின் லக்ஷணங்கள் இவனுக்கு நன்றாகத் தெரியும். ஸஹாதேவன் ஜோதிடத்தில் மஹா நிபுணன்.

---

## பீமனைக் கொல்வதற்குச் சூழ்ச்சி

பஞ்ச பாண்டவர்களைக் கண்டு பொறாமை கொண்ட கௌரவர் யுக்தி பலவற்றால் இவர்களைக் கொல்ல எண்ணினார்கள். ஒருநாள் பீமனை "கங்கையாற்றில் குதித்து விளையாடி நீந்தலாம். வா"

என்று துரியோதனன் கூப்பிட்டுவிட்டு, இவனுக்குத் தெரியாதபடி கூர்மையான இரும்புக் கழுவை ஜல மட்டத்திற்குச் சரியாக ஆற்றில் புதைத்து வைத்திருந்தான். பீமன், குதிக்கும்பொழுது ஓடும் தண்ணீரில் ஒரு வண்டு உட்கார்ந்திருந்ததை உற்று நோக்க, ஆற்றில் புதைக்கப்பட்ட கழுவின் முனையைக் கண்டான். கௌரவர் செய்த மோசத்தை அறிந்தும், அறியாதவன் போல் வேகமாக கழுவிற்கு அப்புறம் தாண்டிக் குதித்து நீந்திக் கரை யேறினன்.

---

## அரக்கு மாளிகையை எரித்தது

சில காலம் சென்றதும் பாண்டு மஹாராஜன் இறந்துபோக, அவனது இளையமனைவியான மாத்திரை அவனுடன் உடன்கட்டை ஏறினள். உடனே பிள்ளைகளுள் மூத்தவரான தர்மபுத்திரருக்கு இளவரசுப் பட்டம் சூட்ட உத்தேசித்தார்கள். ஆனல் துரியோதனன் தானே இளவரசனவேன் என்று வாதாடினன். இவனுக்கு உதவியாக இவனது மாமன் சகுனி என்பவன் ஏற்பட்டான். சகுனி மஹா பொல்லாதவன். அவனது யோசனையின்படி துரியோதனன் பாண்டவரைக் கொல்ல மற்றொரு ஏற்பாடு செய்தான். ஒற்றுமையில்லாமல் சதா சச்சு

ரவு செய்துகொண்டிருந்த கௌரவரை விட்டுப்பாண்டவரைப் பிரித்து வேறு இடத்தில் சில காலம் தனியாக வசிக்கும்படி செய்தால் பிறகு ஒற்றுமை ஏற்படலாம் என்று தந்திரமாக திருதராஷ்டிரனிடம் சகுனி சொன்னான். உடனே திருதராஷ்டிரன் அதுவும் சரியென்று ஒப்புக்கொண்டான். துரியோதனன் ஒருவருக்கும் தெரியாமல் வாரணாவதத்தில் ரகஸியமாக ஒரு அரக்கு மாளிகையைப் பாண்டவருக்கு என்று கட்டுவித்து அதில் போய் வசிக்கும்படி இவ்வைவரையும் தாய் குந்தி தேவியுடன் அனுப்பினான். இவரது சிற்றப்பனான விதுரர் இவர்களது துஷ்ட எண்ணத்தைக் கண்டறிந்து ஆபத்து நேர்ந்தால் அரண்மனையிலிருந்துவெளியே தப்பி ஓட பூமிக்குள்ளாகவே ஒரு சுரங்கம் ஒன்று வெட்டிவைத்து, அதை ரகஸியமாக பீமனிடம் தெரிவித்தார்.

துரியோதனனு லனுப்பப்பட்ட புரோசனன் என்னும் பிராமணன் இவ்வைவரையும், தாயாகிய குந்தி தேவியுடன் அடியோடு எரித்து நாசம் செய்ய சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். ஒரு நாள், இவ்வைவரும் புரோசனன் அயர்ந்து நித்திரை செய்யும் பொழுது, அரக்கு மாளிகைக்கு நெருப்பு வைத்துவிட்டு, தாயுடன் சுரங்கவழியே தப்பியோடினார்கள். துஷ்டனான புரோசனன் 'கெடுவான் கேடு

நினைப்பான்' என்றபடி நெருப்பில் அகப்பட்டுத் தப்ப வழியின்றி இறந்து போனான். ஆனால் எல்லோரும் பஞ்சபாண்டவரும் இறந்துவிட்டதாகவே எண்ணித் துக்கித்தார்கள்.

---

### பகாசுரன் வதம்

சுரங்கத்தின் வழியே சென்ற பஞ்சபாண்டவர், குந்தியுடன் ஏகசக்ரபுரம் சென்று பிராமணர்போல் வேஷங்கொண்டு ஒரு பிராமணன் வீட்டில் வசித்து வந்தார்கள். அவ்வூருக்குச் சமீபத்தில் ஒரு மலையில் பகாசுரன் என்ற ஒரு துஷ்ட அசுரன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் பயந்து அவ்வூர் ஜனங்கள் தினம் ஒருவண்டி சோறும் ஒரு மனிதனையும் அவனுக்கு ஆகாரமாக அனுப்புவது வழக்கம். பாண்டவர் வசிக்கும் வீட்டு முறை வந்ததும் தனது ஒரேமகனை அரக்கனுக்கு இரையாக அனுப்பவேண்டுமேயென்று வீட்டார் வருந்தினார்கள். அப்பொழுது, குந்திதேவி அவர்களைத் தேறுதல்செய்து தன்மகன் பீமனை அனுப்பச் சம்மதித்தாள். பீமன் சென்று அரக்கனுடன் போர்புரிந்து அவனைக் கொன்று ஜயசாலியாகத் திரும்பினான். அவ்வூர் பிரா

மணர்கள் யாவரும் துஷ்டன் இறந்ததையும் தங்கள் கவலை ஒழிந்ததையும் கேட்டுச் சந்தோஷப்பட்டு பீமன் திறமையைப் புகழ்ந்து ஆசிர்வதித்தார்கள்.

---

## துருபதன் கதை

பாஞ்சாலம் என்றொரு தேசம் உண்டு. அத்தேச அரசகுமாரனுன துருபதன் சிறு குழந்தையாக இருக்கும்பொழுது துரோணசாரியாருடன் ஒரே ஆசிரியரிடம் வில்வித்தை கற்றுவந்தான். இருவரும் மிகுந்த நண்பராயினர். அப்பொழுது துருபதன், துரோணசாரியாரிடம் "எனக்குப் பட்டம் கிடைத்தபின், நீ வருவாயாகில் உனக்குப் பாதிராஜ்யம் தருகிறேன்" என்று வாக்குத்தத்தம் செய்திருந்தான். இருவரும் படிப்பு முடிந்ததும் பிரிந்து தங்கள் தங்கள் ஊருக்குச் சென்றார்கள். துரோணர் கிருபியைக் கல்யாணம் செய்துகொண்டு அசுவத்தாமனைப் பெற்றார். துருபதன் பாஞ்சால தேசத்திற்கு அரசனுனன். குழந்தை அசுவத்தாமனுக்குப் பால் கொடுத்து வளர்க்க ஒரு பசு வேண்டுமென்று துரோணர் தன் பழைய நண்பனை துருபதனிடம் போய்க்கேட்டார். அவன் இவரை மதிக்காமலும் பழைய சிநேகிதன் என்றுகூட எண்ணுமலும் அலக்ஷியம் செய்தான். உடனே துரோணருக்குக்

கோபம் வந்துவிட்டது. அவரோ சாதாரண பிராமணர் அல்ல. வில்வித்தையில் மஹா நிபுணர். தனது மாணவனுன அர்ஜுனனைக்கொண்டு துருபதனைத் தோற்கடித்து அவமானப்படுத்தினுர். துருபதன் வெட்கத்துடன் திரும்பி அர்ஜுனனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு வியந்து, இவனுக்குக் கொடுக்க ஒரு பெண் வேண்டுமென்றும், தன்னை அவமானப்படுத்திய துரோணரைக் கொல்ல ஒரு பிள்ளை வேண்டுமென்றும் தவம் செய்து துரௌபதி என்ற பெண்ணையும் திருஷ்டத்யும்னன் என்ற ஒரு மகனையும் அடைந்தான்.

---

## துரௌபதி சுயம்வரம்

அப்பெண்ணிற்குக் கல்யாணகாலம் வந்ததும் சுயம்வரம் ஏற்படுத்தினுன். ஆகாயத்தில், சுழன்று கொண்டிருக்கும் ஒரு மச்ச யந்திரத்தைக் கட்டி, அதை யார் கீழே நிழலைப் பார்த்துக்கொண்டே மேலே குறிவைத்து அடிக்கிருரோ அவருக்கே தன் பெண்ணுன பாஞ்சாலியைக் கொடுப்பதாகச் சொன்னுன். இது மிகவும் சிரமமான வேலை. அர்ஜுனன் ஒருவனே இவ்விதம் அடிக்கும்திறமையுள்ளவன். பாண்டவர் இறந்தனர் என்று வதந்தியிருந்தாலும் அவர்கள் இறந்திருக்கமாட்டார்கள் என்று துருபதன் எண்ணினுன். எங்கேயிருந்தா

னும் இப்பொழுது வெளியாவார் என்ற எண்ணத் துடன்தான் துருபதன் சுயம்வரத்தை இவ்விதம் அமைத்தான். எல்லா தேசத்தரசர்களும் வந்தார் கள். மறைந்து பிராமணர் வேஷம் போட்டிருந்த பாண்டவர் ஐவரும், தாயாகிய குந்திதேவியுடன் பாஞ்சால தேசத்திற்கு வந்து ஒரு குயவனுடைய வீட்டில் தங்கினர்கள். பிறகு ஐவரும் தாயை வீட் டில் விட்டுவிட்டு சபாமண்டபத்திற்கு வந்தார்கள். அரசர்கள் ஒவ்வொருவராக வந்து வில்வித்தையின் திறமையைக் காட்டினர்கள். ஆனல் ஒருவராலும் மச்ச யந்திரத்தை அடிக்க முடியவில்லை. கர்ணன் ஒருவன் எல்லாரிலும் திறமையாக அடித்தான். அவன் அடிக்கும் சமயம் நாண் கயிறு அறுந்து விட்டது. அதனல் குறியும் தவறிவிட்டது. "இந்த யந்திரத்தை அடிக்கத் தகுந்த ராஜ குமாரர்கள் இல்லையா?" என்று துருபதன் மகன் சபையிலுள்ள க்ஷத்ரியர்களைக் கேட்டான். உடனே பிராமணர்கள் மத்தியிலிருந்த அர்ஜுனன் எழுந்து "பிராமணன் மச்ச யந்திரத்தை அடித்தால், அவனுக்கு உமது பெண்ணைக் கொடுப்பீரா?" என்றுன். அதற்கு துரு பதன் "யார் அடித்தாலும் கொடுக்கத்தடையில்லை" என்று சொல்ல, உடனே அர்ஜுனன் முன்வந்து, வில்லை எடுத்து, நாண் ஏற்றி, மச்ச யந்திரத்தை அடித்தான். சரியாகக் குறிவைத்தபடியால் மச்ச

யந்திரம் அறுபட்டுக் கீழே விழுந்தது. எல்லோரும் ஆச்சர்யப் பட்டார்கள். துருபதன் துரௌபதியை அர்ஜுனனுக்குக் கொடுத்தான். துரியோதனன் முதலியவர்கள், 'க்ஷத்திரியர்கள் அநேகர் இங்கு இருக்கும் பொழுது ஒரு பிராமணனு பெண்ணைக் கொண்டுபோகிறது?" என்று பாண்டவர்களுடன் சண்டை செய்ய எதிர்த்தார்கள். அவர்கள் பீம அர்ஜுனர்களால் தோற்கடிக்கப் பட்டார்கள்.

---

## ஐவரும் துரௌபதியை மணத்தல்

பாண்டவரைவரும் வீடுபோய் "அம்மா! ஒரு கனி கொண்டு வந்திருக்கிறோம்" என்றார்கள். குந்திதேவி, விபரம் ஒன்றும் தெரியாதபடி "ஐவருமாக எடுத்துக் கொள்ளுங்கள்" என்றாள். உடனே ஐவரும் துரௌபதியை தாய் வார்த்தையின்படி மனைவியாக அடைந்தார்கள். இதைக்குறித்து துருபதன் வருத்தப்பட்டான். உடனே வியாசபகவான் வந்து, துரௌபதி பூர்வ ஜென்மத்தில் நளாயிணி என்னும் உத்தமியாக இருந்த கதையைச் சொல்லி "எல்லாம் விதிவசப்படியே நடக்கும்" என்று சமாதானப் படுத்தினர். துருபதன் மனத் தேறுதல் செய்துகொண்டு 'எல்லாம் ஈசன் செயல்' என்று பெண்ணை ஐவருக்கும் கல்யாணம் செய்து கொடுத்

தான். பின்பு பாண்டவர் இறக்கவில்லை யென்றும் அவரே இவ்வைவர் என்றும் தெரிந்ததும் துருபதன் மிகவும் சந்தோஷப்பட்டான்.

---

### கிருஷ்ணன் பாண்டவ ஸஹாயன்

மதுராபுரியில் பலராமன், கிருஷ்ணன் என்று இரண்டு அரசகுமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் பாண்டவருக்கு மாமனை வசுதேவரின் புத்திரர்கள். கிருஷ்ணன் வெகு தந்திரசாலி. ஏழைக்கு உதவி செய்யும் குணமுள்ளவர். உண்மை வழியில் நடப்பவரிடத்தில் அன்பாயிருப்பவர். துரௌபதி கல்யாணத்தில் பாண்டவரைக் கண்டது முதல் இவர்களிடத்தில் அன்பும் விசுவாசமும் பூண்டு இவர்களுக்கு நண்பனுகி உதவி செய்து வரலானர்.

---

### தருமபுத்திரர் ராஜசூய யாகம் செய்தது

பஞ்ச பாண்டவர்கள் இறக்கவில்லை என்றும் துருபதன் புத்திரியான பாஞ்சாலியை சுயம்வரத்தில் மணந்தார்களென்றும் திருதராஷ்டிரன் முதலியோர் கேள்விப்பட்டதும், பீஷ்மர், விதுரர், இவர்கள் வார்த்தைப்படி பாண்டவரை வரவழைத்து ராஜ்யத்தில் பாதியைப் பங்கிட்டுக்கொடுத்து, இந்திரபிரஸ்தத்தை ராஜதானியாக்கிக் கொண்டு ஆளும்படி செய்தார்கள்.

அவ்விதமே தர்மபுத்திரர் குடிகளை யன்புடன் பாதுகாத்து ஆண்டு வந்தார். தங்கள் பிதா நற்கதி யடையும் பொருட்டு ஒரு ராஜசூய யாகத்தை உலகத்திலுள்ள ராஜாக்கள் புகழும்படி செய்து முடித்தார். இவர்களுடைய பெருமையையும் அரசாக்ஷியையும் யாவரும் புகழ்வாராயினர்.

---

## பாண்டவர் சூதாடி ராஜ்யத்தை இழத்தல்

இதைக்கேட்ட கௌரவர்கள் பஞ்சபாண்டவர்கள் மீது பொருமை கொண்டு இவர்களை மறுபடி வஞ்சிக்க எண்ணினர்கள். ஒரு நாள் இவர்களை இந்திரப் பிரஸ்தத்திலிருந்து அஸ்தினபுரம் வரவழைத்து, அவர்களுடைய மாமனை சகுனியை தர்மபுத்திரருடன் சூதாடச் செய்தார்கள். தர்ம புத்திரர் எவ்வளவு சாமர்த்தியமும் நற்குணமும் கொண்டிருந்தாலும் இந்தச் சூதாட்டத்தில் கொஞ்சம் பிரியம் கொண்டவர். ஆகையால் அவர் “பொழுது போக்கிற்காகச் சிறிது நேரம் விளையாடுவோம்” என்று நினைத்துச் சூதாட உட்கார்ந்தார்கள். விளையாட்டிற்காக ஆட ஆரம்பித்தது வினையாக முடிந்தது. தனது ராஜ்யம், செல்வம் யாவற்றையும் பந்தயமாக வைத்துச் சூதாடித் தோற்ருர். பிறகு மனைவியையும் தம்பியையும் வைத்துத் தோற்ருர்.

---

## துரௌபதி மான சம்ரக்ஷணம்

பாண்டவர்கள் சூதாடித்தோற்ற உடனே துரியோதனன் தன் தம்பியாகிய துச்சாதனனை அனுப்பி துரௌபதியை சபைக்கு அழைத்துவரும்படி செய்தான். தம்பியும் அவ்வாறே துரௌபதியை சபை முன் அழைத்து வந்து, துரியோதனனிட்ட கட்டளைப்படி அவளை மானபங்கம் செய்ய எண்ணினன். துரௌபதி உடனே ஸ்ரீகிருஷ்ணபகவானைக் குறித்துத் தியானம் செய்தாள். ஸ்ரீகிருஷ்ணபகவானும் துரௌபதியின் வேண்டுகோளுக்கிரங்கி அவளது புடவையை எடுக்க எடுக்க வளரும்படி செய்தார். ஸ்ரீகிருஷ்ணபகவானல் அவளது மானம் காப்பாற்றப்பட்டது.

---

## தருமரின் பொறுமை

அப்பொழுது அதே சபையில் இருந்த பீமனுக்குக் கோபம் வந்து ஒரே அடியாக அவர்களை நொறுக்க எண்ணினன். அவனுடைய கோபத்தைக் கண்ட தருமர், அவனைப் பொறுமையுடன் இருக்கும்படி சொல்ல, அவனும் தமயனுக்கு மாறாக நடக்கக் கூடாதென்று எண்ணி கோபத்தை யடக்கிக்கொண்டு மரியாதையுடன் இருந்தான்.

---

## பாண்டவரின் சபதம்

கௌரவர்கள் பண்ணின அக்ரமச் செய்கைகளைக்கண்ட அர்ஜுனன் தான் கர்ணனைக் கொல்வேனென்றும், பீமன் தான் துரியோதனனைக் கொல்வேனென்றும், துரௌபதியோ, துரியோதனனைக் கொன்ற பிறகே தன் கூந்தலை முடிப்பேனென்றும் பலவிதமான சபதங்களைச் செய்தார்கள். பிறகு ஒரு முறை தன் தர்மத்தைப் பந்தயப் பொருளாக வைத்துச் சூதாடி தம்பிகளையும் மனைவியையும் மீட்டுக் கொண்டார். அங்குள்ள பெரியோர்கள் துரியோதனனது கொடுமையை எடுத்துச் சொல்லி பாண்டவர்களுடைய ராஜ்யத்தை அவர்களிடமே கொடுத்துவிடும்படி வேண்டினர்கள். ஆனல் துரியோதனன் அவ்விதம் செய்ய உடன்படாமல் காலதாமதம் செய்ய நினைத்து, பாண்டவர்கள் காட்டில் சென்று பன்னிரண்டு வருஷம் வாசம் செய்ய வேண்டுமென்றும், அதன் பிறகு ஒரு வருஷம் எவரும் அறியாதபடி மறைந்து வசிக்க (அஞ்ஞாதவாசம் செய்ய) வேண்டும் என்றும், பிறகு பதின்மூன்ரும் வருஷ முடிவில் வந்தால் ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுப்பதாகவும் கூறினன். அதன்படியே சத்தியத்திற்குக் கட்டுப்பட்ட ஐவரும், தாயாகிய குந்திதேவியை விதுரர் வீட்டில் வைத்துவிட்டு துரௌபதியுடன் காட்டில் வாசஞ்செய்யச் சென்ருர்கள்.

---

## வனவாசம் போவது

அங்கு சூரியனுடைய அநுக்ரகத்தால் ஒரு விசித்திரமான போஜன பாத்திரத்தை, அதாவது அக்ஷயபாத்திரத்தை அடைந்து, அதனால் ஆயிரக் கணக்கான ஜனங்களுக்கு நடுக்காட்டில் தினந்தோறும் போஜனம் செய்வித்து ஏழைகளை ஆதரித்தார்கள். காட்டில் வியாசபகவான் முதலிய மஹரிஷிகள் வந்து இவர்கள் படும் கஷ்டத்தைப்பார்த்து, இவர்களுக்கு முன்னமே அயோத்தியில் அரசாண்ட ஸ்ரீராமர், சக்ரவர்த்தியின் குமாரராக இருந்தும் தகப்பனர் வார்த்தையின்படி காட்டில் அலைந்து கஷ்டப்படும்படி நேர்ந்ததையும், நளன் சூதாடி நாடு முதலியவைகளை இழந்து, மனைவியாகிய தமயந்தியை விட்டுப் பிரிந்து இழிவான தொழில்களைச் செய்து கஷ்டப்பட்டதையும், அரிச்சந்திரன் உண்மையின் பொருட்டு அனுபவிக்கநேர்ந்தபல கஷ்டங்களையும் எடுத்துக் கூறி தெய்வத்தை நொந்துகொள்ளல் கூடாது என்று தேறுதல் சொன்னர்கள்.

---

## தருமரின் பெருந்தன்மை

பஞ்சபாண்டவர்கள் வனவாசம் செய்யும் பொழுது துரியோதனன் முதலிய நூறுபேர்களையும் ஒரு கந்தர்வன் வந்து கட்டிக்கொண்டு ஆகாச மார்க்கமாகப் போய் விட்டான். அதைக் கேட்ட தர்மபுத்தி

ரர் தங்கள் கஷ்டத்திற் கெல்லாம் அவர்களே மூல காரணமா யிருந்தபோதிலும் எதிரி கையில் துரியோதனன் முதலியோரைக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்று சொல்லி, தம்பிகளைக்கொண்டு கந்தர்வனை வெருட்டிவிட்டு கௌரவரை மீட்டு அன்புடன் உபசரித்து அனுப்பிவைத்தார். இவ்விதம் செய்ததால் தருமபுத்திரர் பெருமையும், பொறுமையும் பகைவரிடம் கருணையும் வெளிப்படலாயிற்று. இவர்கள் காட்டில் வாழ்ந்து வரும் பொழுது இன்னும் அநேக விசேஷங்கள் நடந்தன.

---

## காளமாமுனிவரின் சூழ்ச்சி

மற்றொருசமயம் துரியோதனன் தனக்கு தர்ம புத்திரர் செய்த நன்றியை மறந்து காளமாமுனிவரை யழைத்து ஒரு யாகம் செய்யச்சொல்லி, அதிலிருந்து வெகு உக்ரத்துடன் கிளம்பிய ஒரு பூதத்தைக் கொண்டு பாண்டவர் ஐவரையும் கொன்றுவிட்டு வரும்படி ஏவினன். ஆனல் அந்தப் பூதம் ஐவர் இருக்குமிடம் செல்லுமுன்பே, அவர்கள் வேட்டையாடிக் களைத்து விஷங்கலந்த ஒரு குளத்தின் ஜலத்தைக் குடித்து மயங்கிக் கீழே இறந்தவர்கள் போலக் கிடந்தார்கள். அவர்கள் இறந்தார்களென்று அந்தப் பூதம் நினைத்துத் திரும்பி “இறந்த பிணத்தின் மேலா என்னை ஏவினய்?” என்று காளமாமுனிவரை

ஒரே அடியாய் அடித்துக் கொன்று தின்றது. காளமாமுனிவர், சாதுக்களும், ஒரு பாவமும் அறியாதவர்களுமான பாண்டவர்களுக்கு விரோதமாகச் செய்த சூழ்ச்சிக்கு இது தகுந்த தண்டனை தான் என்று எண்ணி உயிர்விட்டார்.

---

## அர்ஜுனன் பாசுபதம் பெற்றது

காட்டில் பாண்டவர்கள் வசித்து வருகையில் அர்ஜுனன் கைலாச மலைச்சாரலில் சென்று பரமசிவனைக் குறித்துத் தவம்செய்தான். அப்பொழுது ஒரு காட்டுப்பன்றி இவனைக்கொல்லவர, இவனது தபசைக்கண்டு மகிழ்ந்த பரமசிவன் இவனைக் காப்பாற்ற, வேடன் வேஷத்துடன் வந்து அப்பன்றியை அடித்தார். அதே சமயத்தில் அர்ஜுனன் தவநிலை கலைந்து தன் முன்னிற்கும் பன்றி தன்னை அணுகாதபடி அம்பெடுத்து எய்தான். பன்றி கீழே விழுந்ததும் வேடன் எதிர்ப்பட்டு "தபசியென வேடங்கொண்டு மிருகங்களைக் கொல்வது நியாயமோ?" என்று அர்ஜுனனை இகழ, இருவருக்கும் போர் உண்டாயிற்று.

பிறகு பரமசிவன் தனது உண்மை ரூபத்தைக் காட்டி அர்ஜுனன் தவத்தையும் சௌர்யத்தையும் கண்டு மகிழ்ந்ததாகக்கூறி இவ்வித சௌர்யவான்

பாசு பதாஸ்திரம் பெறுதல் தருமென்று விசேஷ சக்திபூண்ட அப்பாசுபத அஸ்திரத்தைக் கொடுத்து ஆசீர்வதித்தார்.

---

## அஞ்ஞாதவாசம் புகுதல்

இவ்விதமாக பன்னிரண்டு வருஷம் வனவாசம் முடியவும் பாண்டவர்கள் ஒருவருஷம் அஞ்ஞாத வாசம் செய்ய எங்கே போகலாம் என்று யோசித்தார்கள். தெற்கே விராட நகர் என்று ஒரு பட்டணம் உண்டு. அங்கு அரசாண்ட அரசன் விராடன். அவன் மஹா சாது. அவ்வூரில் ஜனங்கள் மிகவும் நல்லவர்கள். அதுதான் தாங்கள் மறைந்து வசிப்பதற்குச் சரியான இடமென்று யோசித்து, தர்மபுத்திரர் பிராமணராகவும், பீமன் சமயல்காரனுகவும் வேஷங் கொண்டார்கள். அர்ஜுனன் தேவலோகத்து ஊர்வசியால் கொடுக்கப்பட்ட ஒரு வரத்தால் அலி ரூபமாகி நாட்டியம் பழக்கிவைக்கும் தொழிலே ஏற்றுக்கொண்டு, பிரகன்னளே என்ற பெயருடன் விராடன் அரண்மனேயில் பெண்களுக்கு நாட்டியம் கற்பிக்க அமர்ந்து கொண்டான். நகுலன் குதிரை பழக்குபவனுகவும், சகாதேவன் மாடு மேய்ப்பவனுகவும் அரசனிடம் வேலேக்கு அமர்ந்தார்கள். துரௌபதி, சைரந்திரி என்ற ஒரு பணிப்பெண்ணுக விராடன் மனேவியிடம்

வேலைக்கு அமர்ந்தாள். இவர்கள் அந்நகருக்கு வந்ததுமுதல் அவ்வூரில் மாதம் மும்மாரி பெய்து தேசம் மிகவும் செழித்து விளங்கியது. இப்பொழுதும் ஏதாவது ஒரு ஊரில் மழையில்லையென்ருல் ஊரார் ஒன்றுகூடி விராடபர்வம் வாசிப்பது வழக்கம்.

---

## கீசகன் வதம்

இவ் விராடராஜனுக்கு கீசகன் என்றெரு மைத்துனன் உண்டு. அவன் மகா பலசாலி. அவன் சைரந்திரியைக் கண்டு ஆசை கொண்டு அவளை வற்புறுத்தினன். சைரந்திரி விராடராஜனிடம் இதைப்பற்றி முறையிட்டாள். ஆனல் கீசகனுடைய பலத்திற்காக பயந்து அவனைத் தண்டியாமல் சும்மா விட்டுவிட்டான். அதனல் ஓரிரவு பீமன் பெண் வேஷம் பூண்டு கீசகனைத் தனியிடத்திற் சந்தித்து, இரவில் அவனைக் கொன்றதோடு நில்லாமல் அவனுக்கு உதவி புரியவந்த உபகீசகரையும் கொன்று தள்ளினன். அக்ரமம் செய்தோரைத் தண்டித்தல் நியாயமன்ரூே ?

---

## துரியோதனன் பாண்டவரைத் தேடுதல்

இதன் மத்தியில் துரியோதனதியர் எல்லா திசைகளிலும் தூதர்களை அனுப்பி பாண்டவர்கள் ஒளிந்து வசிக்குமிருப்பிடத்தை அறிய முயன்ருர்

கள். கடைசியாக இவ்விராட நகரத்தில் கீசகன் இறந்தான் என்று கேள்விப்பட்டதும், ஆயிரம் யானை பலங்கொண்ட கீசகனைக்கொல்லுந்திறமையுள்ளவன் பீமனுகத்தான் இருக்கவேண்டும் என்று துரியோதனன் ஊகித்துத் தெரிந்துகொண்டான். தூதர்களும் பாண்டவர்கள் விராட நகரத்தில் தான் வசிக்கிருர்கள் என்ற செய்தியைக்கொண்டு வந்தார்கள். அச்செய்தியை கேள்விப்பட்டதும் துரியோதனன் விராடநகரத்தின் மேல் படையெடுத்துவந்தான். வந்ததும் அந்நகரத்தின் பசுக்களை மறித்து ஓட்ட, அவைகளை மீட்க விராடராஜன் மகன் உத்திரன், முதல் முதல் சென்று தோல்வியடைந்து திரும்பினுன். உடனே உத்திரன் பிரகன்னளை வேடம் பூண்ட அர்ஜுனனைத் தேர்ப்பாகனுக அமர்த்திக்கொண்டு மறுபடியும் யுத்தத்திற்குச் சென்ருன். பாண்டவர்கள் மறைந்து வசிக்க ஆரம்பித்தது முதல் அன்ருேடு ஒருவருஷம் முடிவானபடியால், அர்ஜுனன் வெளிப்பட்டு, யுத்தத்தில் துரியோதனுதியரைப் புறங்காட்டி யோடும்படி அடித்து, அவர்களால் கவரப்பட்ட பசுக்களை மீட்டான். பீஷ்மர், துரோணர், விதுரர் முதலானோர் பாண்டவர்கள் வனவாசத்தையும், அஞ்ஞாத வாசத்தையும் குறைவில்லாமல் முடித்து விட்டார்கள் என்று சந்தோஷப்பட்டார்கள்.

---

## கிருஷ்ணன் தூது

யுத்தத்தில் தோல்வியடைந்த கௌரவர்கள் திருதராஷ்ட்ரனிடம், பாண்டவர்கள் அஞ்ஞாத வாசத்தை சரியாய் முடிக்கவில்லை யென்றும், அதனுல் ராஜ்யத்தில் பாதியைக் கொடுக்கக்கூடாதென்றும் மன்ருடினுர்கள். திருதராஷ்ட்ரனும் அதற்குச் சம்மதித்தான். பாண்டவர்கள் தங்கள் வனவாசம் முடிந்ததும் ஆதியில் சபையில் வாக்களித்தபடி பாதிராஜ்யத்தைத் திருப்பித் தரும்படி உலூக முனிவரைத் தூதாக அனுப்பினுர்கள். அதற்குத் துரியோதனன் ராஜ்யத்தில் பாதியைக் கொடுக்க முடியாதென்று மறுத்துச் சொல்லிவிட்டான். தருமர் மறுமுறை தங்களுக்கு ஆபத்துக்களில் உதவி செய்யும் ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தூதாக அனுப்ப உத்தேசித்து அவரைப்பார்த்து "நீங்கள் சென்று முதலில் பாதி ராஜ்யத்தைக் கேளுங்கள். அதைக் கொடுக்க மறுத்தால், ஐந்து கிராமங்களாவது கேளுங்கள். அதையும் கொடுக்க மறுத்தால், ஐந்து விடாவது கேளுங்கள். அதையும் கொடுக்க மறுத்தால், யுத்தம் இருக்கவே யிருக்கிறது" என்று சொன்னுர். ஆனுல் சகோதரர் நால்வரும் சமாதானத்தைக் காட்டிலும் யுத்தத்தையே விரும்பினுர்கள். அப்பொழுது திரௌபதியும் ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் "இவ்விதம் சமாதானம் செய்யத் தலைப்

பட்டால் என் கூந்தலை எப்பொழுது முடிப்பது" என்று தன் பழைய சபதத்தை ஞாபகப்படுத்தினாள். பீமார்ஜுன ரிருவரும் போர் செய்யவே ஏற்பாடு செய்யும்படி ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் வேண்டினார்கள். கடைசியாக பகவான் துரியோதனனிடம் தூதாகச் சென்றார். துரியோதனன் இவரைக் கொல்ல முயற்சித்ததோ டில்லாமல் சபையிலும் அவமானப் படுத்தினான். ஸ்ரீகிருஷ்ணன் வெகு சாந்தத்தோடு பாதி ராஜ்யத்தைக் கேட்டார். துரியோதனன் கொடுக்க முடியாதென்றும் போர் செய்தே பெறவேண்டும் என்றும் சொல்லியனுப்பினான்.

---

## விதுரர் தீர்த்தயாத்திரை செல்லுதல்

துரியோதனன் சபையில் ஸ்ரீகிருஷ்ண பகவானை அவமானப்படுத்தியதையும், பாண்டவரைப் பற்றி இழிவாகப் பேசியதையும், விதுரர் பொறாதவராகி அவனுக்குப்பல நல்ல புத்திமதிகளை எடுத்துச்சொல்லி எப்படியாவது ஆதியில் சபையில் வாக்குத்தத்தம் செய்தபடி ராஜ்யத்தைக் கொடுப்பதே உசிதம் என்று எடுத்துரைத்தார். அதைக் கேட்ட துரியோதனன் விதுரரைத் தன் சிற்றப்பனென்று கூடப் பாராமல் மரியாதைக் குறைவாகப் பேச, அவர் கோபங்கொண்டு சபைநடுவே எழுந்து "துஷ்டர்களுக்கும், அதர்மம் மேற்கொண்டவர்களுக்கும்

வாக்குறுதி இல்லாத அற்பர்களுக்கும் என்னுல் உதவி செய்ய முடியாது" என்று சொல்லித் தன் கையிலிருந்த வில்லை முறித்தெறிந்து விட்டு தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்.

---

## பாண்டவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணன் உதவியாதல்

துரியோதனன், தன் ராஜ்யத்தில் பாதியைக் கொடுக்க மறுத்ததும் பாண்டவர்கள் யுத்தத்திற்குத் தயாரானுர்கள். அநேக அரசர்கள் பாண்டவர்களுக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். கௌரவருக்கும் அநேகர் உதவிக்காக வந்தார்கள். இரு திறத்தாருக்கும் பலமுள்ள சைன்யப்படைகள் சேர்ந்தன. ஸ்ரீகிருஷ்ணபகவான் ஆயுதம் எடுக்காமலே பாண்டவருக்கு உதவி புரிவதாக ஒப்புக்கொண்டார். அர்ஜுனனுக்குத் தேர் ஓட்டவும் சம்மதித்தார். அதனுல் அவருக்கு பார்த்த சாரதி என்ற ஒரு பெயரும் உண்டு. அதுவுமன்றி தன் தமையனுன பலராமர் யுத்தம் நடக்கும்பொழுது ஊரிலிருந்தால் அவசியம் துரியோதனனுக்கே உதவி புரிவார் என்று ஸ்ரீகிருஷ்ண பகவானுக்குத் தெரியுமாகையால், அநேக காரணங்களை எடுத்துக் காட்டி அவரைத் தீர்த்தயாத்திரை போகும்படி ஏவினுர். இது போலவே அநேகரைப் பாண்டவருக்கு உதவி செய்யுமாறு தூண்டியும், கௌரவ

ருக்கு உதவிசெய்யாதிருக்குமாறு வேண்டியும், வந்தார். ஸ்ரீகிருஷ்ணபகவான் விஷ்ணுவின் அவதாரம். உலகத்திலுள்ள துஷ்டர்களை சம்ஹரித்து பூமியின் பாரத்தைக் குறைத்து, பக்தர்களை ரக்ஷிப்பதற்காகவே அவதாரம் செய்தவர். கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பது திண்ணம்.

---

## கர்ணனின் மேன்மைக்குணம்

பாண்டவர் சகாயனான ஸ்ரீகிருஷ்ணன் குந்தி தேவியை அழைத்து அவளிடம் "கர்ணன் உனது மூத்தமகன். அவனிடம் நீ சென்று, நீதான் அவனது தாயார் என்று தெரிவி. அவனைத் துரியோதனன் கக்ஷியைவிட்டு நீங்கி பாண்டவருக்கு சகாயம் செய்யும்படி வேண்டிக்கொள். அவன் இசையாவிட்டால் அவனிடம் அர்ஜுனனைக் கொல்வதற்கென்று சரணம் புகுந்திருக்கும் நாகாஸ்திரத்தை அர்ஜுனன் மேல் இரண்டாம் முறை விடாமல் இருக்கும்படி வேண்டுவாயாக" என்று தெரிவித்தார். இதைக்கேட்ட குந்திதேவி மிக்க மனவருத்தத்துடன், புத்திரர் ஐவர்மேல் உள்ள அன்பால் அவரைக் காப்பாற்றும் பொருட்டு கர்ணனிடம் சென்று கர்ணனின் தாய் தானே என்று ரூபித்தாள். அவன் உடனே தாயை வலம்வந்து நமஸ்கரித்து நின்றான்.




குந்தியைத் தன் தாயாரென்று அறிந்ததும் கர்ணன் வணங்குகின்றான்

பிறகு தான் வந்த காரியத்தைத் தெரிவித்துப் பாண்டவருக்கு உதவிசெய்யும்படி சொன்னாள். இதைக்கேட்ட கர்ணன் பெற்றோர்களால் கைவிடப் பட்டு தாய் தகப்பன் யார் என்று அறியாத தன்னை துரியோதனன் நண்பனாக்கிக் கொண்டதையும், தனக்கு அவன் செய்த பலவித நன்மைகளையும், தன்னை அங்கதேசத்திற்கு அரசனாக்கியதையும், யுத் தத்தில் தன்னையே முற்றிலும் நம்பியிருத்தலையும் எடுத்துக்கூறினான்; மேலும் துரியோதனன் தனக் குச்செய்த பல நன்மைகளையும் நினைத்து ஆபத் துக் காலத்தில் அவனுக்குதவிசெய்யாது நன்றி யற்றவனாகத் தன்னால் இருக்க முடியாதென்றும், கடைசி வரையில் துரியோதனன் பக்கத்திலேயே நின்று யுத்தம்புரிந்து அவனுக்காகத் தான் தன் பிராணனை விடத் தயாராக இருப்பதாகவும் சொன் னான். கர்ணன் அதனுடன் நில்லாமல் தான் யுத்த களத்தில் இறந்தால் தன்னுடைய தம்பிகளாகிய பாண்டவரைக்கொண்டு தனக்குக் கர்மம் செய்விக்கும் படி வேண்டிக்கொண்டான். குந்தியும் அதற்குச் சம்மதித்தாள். அதன்மேல் குந்தி அவனை அர்ஜு னன்மீது முதல்தரம் தவிர இரண்டாம்தரம் நாகாஸ் திரம் விடாமலிருக்கும்படி வேண்டிக்கொண்டாள். கர்ணன் மகா மேன்மைக்குணம் பொருந்தியவனாத லாலும், தர்மிஷ்டனாதலாலும் அவள் வார்த்தைக் குக் கட்டுப்பட்டு ஒப்புக்கொண்டான்.

பிறகு ஸ்ரீகிருஷ்ணன் தேவேந்திரனையழைத்து, கர்ணன் காதிலணிந்திருக்கும் இரண்டு குண்டலங்களும், தேகத்திலிருக்கும் கவசமும் இருக்கும்வரை அவனை ஒருவராலும் கொல்ல முடியாதாகையால் அவனிடமிருந்து அதை ஒரு யாசகப்பிராமணன் போல் வேஷம் போட்டுக்கொண்டு போய் வாங்கி வரும்படி சொன்னார். கர்ணன், யார் எதைக்கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல், கொடுக்கக் கூடியவன். அதனால் தன்னிடம் யாசகத்திற்கு வருபவன் இந்திரன் தான் என்றும், தனது கவச குண்டலங்களைக்கொடுத்துவிட்டால் யுத்தத்தில் சுலபமாய்க் கொல்லப்படுவான் என்றும் தனது தகப்பனான சூரியனால் முன்னமேயே அறிந்திருந்தும், யாசகர்க்கு இல்லை என்று சொல்லும் வழக்கமில்லாததால் சந்தோஷமாகக் கொடுத்தான். துரியோதனனுக்கு மந்திரியாகவும் குருவாகவும் இருந்து வந்த பீஷ்ம துரோணரிருவரும் படைத்தலைவர்களாக அமர்ந்து யுத்தத்திற்குத் தயாராயினர்.

---

## பகவான் அர்ஜுனனுக்குக் கீதை உபதேசித்தல்

கடைசியாக இருதிறச்சேனைகளும் குருக்ஷேத்திரம் என்னும் இடத்தில் சந்தித்தன. அர்ஜுனன் ரதத்திலேறி எதிர் சைன்யத்தைக் கண்டு அதில் தனது பாட்டனாகிய பீஷ்மரும், குருவாகிய துரோணாச்சாரியரும் மற்றுமுள்ள பந்துக்கள் யாவரும் இருக்க, அவர்களைக்கொன்று எதற்காகத் தனக்கு

ராஜ்யம் என்று எண்ணி யுத்தம் செய்ய மயங்கி ளுன். அச்சமயம் அர்ஜுனனது ரதத்தை ஓட்ட உட்கார்ந்திருந்த ஸ்ரீகிருஷ்ண பகவான் ஒவ்வொரு வரும் அவரவரது கடமைகளைச் செய்து முடிக்க வேண்டுமென்றும், க்ஷத்திரியனுகிய அர்ஜுனன் யுத்தத்திற்குப் பின் வாங்கக்கூடாதென்றும் இன் னும் அநேக அருமையான நீதிகளைப் போதித்து யுத்தம் செய்யும்படி ஏவினுர். ஸ்ரீகிருஷ்ணன் இந்த யுத்தத்தில் அர்ஜுனனுக்குச் செய்த உபதேசங்க ளுக்குத்தான் பகவத்கீதை என்று பெயர். அது வெகு அழகான ஒரு நூல். நீங்கள் பெரியவர்களான பிறகு அதைப்படிக்க விருப்பங் கொள்வீர்கள்.

---

## யுத்தமும் அதன் முடிவும்

யுத்தம் முறையே ஆரம்பிக்கப் பட்டு பதி னெட்டு நாட்கள் நடந்தது. இருதிறத்திலும் அநேகர் மாண்டனர். யுத்தத்தில் அர்ஜுனன், கர்ணனை எதிர்த்தான். உடனே கர்ணன் நாகாஸ் திரம்விட, அதை ஸ்ரீகிருஷ்ண பகவான் தந்திரம் செய்து தடுத்துவிட்டார். கடைசியாகக் கர்ணனை அர்ஜுனன் கொன்றுன். உடனே குந்தி அழுது புலம்பி, பாண்டவரிடம் கர்ணன் அவர்களது தமையன் என்பதையும், அவன். வரலாற்றையும் சொல்லி அவனுக்குக் கர்மம் செய்யும்படி தூண்டி ளுள். கர்ணனுக்குக் கர்மமும் முறையே நடந்தது. பீமன் துரியோதனனைக் கொன்று துரௌபதியின்

கூந்தலை முடித்தான். திருஷ்டத்யும்னன் துரோணரையும், அர்ஜுனன் பீஷ்மரையும் முறையே கொன்றார்கள். பீஷ்மர் அடிபட்டது தக்ஷிணாயனத்திலானபடியால், உத்திராயனத்திற்காகத் தன் உயிரை வைத்துக்கொண்டிருந்தார். அவருக்காக அர்ஜுனன் அநேக அம்புகளால் படுக்கையும், ஓரம்பினால் கங்கையையும் தருவித்தான். உத்திராயனம் வரும் வரையில் பீஷ்மர் பாண்டவர்களுக்கு ஸ்ரீவிஷ்ணு ஸகஸ்ர நாமாவையும் இன்னும் அநேக ராஜ்ய தந்திரங்களையும் எடுத்து போதித்தார்.

---

## முடிவுரை

யுத்தம் முடிந்ததும் பாண்டவர்களுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் நடந்தது. அவர்கள் ராஜ்யத்தை நிதிவழுவாது அரசாண்டு வந்தார்கள். ஸ்ரீகிருஷ்ண பகவானும் அவர்களுக்கு அடிக்கடி உதவி செய்து வந்தார். பாண்டவர்கள் அநேக ஆயிரம் வருஷங்கள் அரசாண்டபின் கடைசியாக ஐவரும் வைகுண்டம் அடைந்தனர். அவர்களுக்குப்பின், அர்ஜுனன் மகனை அபிமன்யுவின் மனைவியும், விராடராஜனது புதல்வியுமான உத்திரையின் வயிற்றில் பிறந்த பரிக்ஷித்து மகாராஜன் அரசனானன். பரிக்ஷித்துக்குப் பின் அவன் மகன் ஜனமேஜயன் ஆண்டுவந்தான். இவ்வரசன் மூலமாகத்தான் மகா பாரதம் உலகத்திற்கு வெளிவந்தது.

முற்றிற்று